ஸ்ரீயை நம:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

---

ஸ்ரீ நிகமாந்த மஹாதேசிகன்

அருளிச்செய்த

ஸத்யவ்ரதக்ஷேத்ர மாஹாத்ம்யம் என்கிற

ஹஸ்திகிரிமாஹாத்ம்யம்.

---

இஃதை

திருக்குடந்தை-தட்டை

# கிருஷ்ணமாசாரியர்

கேட்டுக்கொண்டபடி

அத்திப்பட்டு-மாடபூசி வித்வான். உ.ஹ. வே.

# ஸ்ரீநிவாஸராகவாசாரியர்

சோதித்தனுப்பியப்ரதியின்படி

செய்தவாயல்-மாடபூஷி

ஸ்ரீமான்

# பார்த்தஸாரத்யாசாரியர்

ஆதிகலாநிதி அச்சுக்கூடத்தில்

அச்சிற்பதிப்பித்தனர்.

---

ஸ்ரீதேசிகன் திருவவதார-வருஷம் ௬௧௦-வதான

பிரமாதி-வருஷம் வைகாசிமீ.

சென்னைபுரி.





ஸ்ரியை நம:.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம:.



ஸ்ரீ நிகமாந்த மஹாதேசிகன் அருளிச்செய்த

ரஹஸ்யங்களில் ௩௨ - வது, ரஹஸ்யமான

ஸத்யவ்ரதக்ஷேத்ரமாஹாத்ம்யம்

என்கிற

ஹஸ்திகிரிமாஹாத்ம்யம்.



ராமாநுஜதயாபாத்ரம் ஜ்ஞாநவைராக்யபூஷணம்
ஸ்ரீமத்வேங்கடநாதார்யம் வந்தே வேதாந்ததேசிகம்.



ஸாநாஹம் ஸஹதாம் ஸஹாநடஜடாவயங்குநியந்த்ரண
ச்ருங்காரபங்கஸிங்காராஜஸம்ஹிதஷ்ட ஜந்தூனாம் தக்ஷம்-ஸாதம்யாவஷ
ஸம்ஸத்ஸ்நநமணெவத்தார-வ்யத்தாநகஷ்ரேணீபெவாநவாதிஜா
தக்ஷ்காவந்த்யாமஸீமாமஹெ.

வாழியருளாளர்வாழியணியத்திகிரி
வாழியெதிராசன்வாசகத்தோர்-வாழி
சரணாகதியென்னுஞ்சார்வுடன்மற்றொன்றை
அரணாகக்கொள்ளாதாரன்பு. (௧)

ஸகலலோகஹித தத்த்வவிஷய விவிய வேதாந்தோபப்ரும்ஹண
ங்களான புராணங்களில் ஸாத்விகமாகையாலே முற்பட
எண்ணப்பட்ட ப்ரஹ்மாண்டபுராணத்தில் ஸத்யவ்ரதக்ஷேத்ர

சாஸ்த்ரப்ரபாவத்தாலே ஸம்ஸித்தமான பேரருளாளன்பெரு மையை பாவுகரான பகவத்விஷயிகளுடைய ஹ்ருதயரஞ்ஜநார்த்த மாக, மநஸ்ஸிலே பாவமும் வாக்கிலே ராகமும் கரத்திலே தா ளமுமாக பாவராகதாளங்களைவகுத்த பரதசாஸ்த்ரத்தின்படி யே பண்ணுமிசையில்திகழப்பார்க்கின்றோம், இத்தைக்குறி க்கொண்டு கேட்டருள்வீர்மின்.

எண்டிசையுங்கடலேழுமலைகளேழு மீரேழுவையகமும்ப டைத்திலங்கும், புண்டரிகத்தயன்புணர்த்தபெரியவேள்விப்புனி தநறும் போக்கியத்தையுகந்துவந்து, தொண்டையெனுமண்ட லத்தினடுவிற்பாரிற் றாநிலமெய்விரதத்திற்றோன்றிநின்ற, கொ ண்டலருட்குணமேநாங்கூறுகின்றோங் கூர்மதியீர்குறிப்பாகக் கொண்மினீரே. (உ)

வம்மின்புலவீரருளாளப்பெருமாளென்றுமருளாழி, அம் மானென்றுந்திருமகளைப்பெற்றுமெனெஞ்சங்கோயில்கொண் ட, பேரருளாளரென்றும்வியப்பா விருதூதும்படிகளைபரண் ட, கருணைக்*கடலையெவ்வண்ணம்பேசுவீரீதென்னபாங்கே. ௩

ஒன்றேபுகலென்றுணர்ந்தவர்காட்டத்திருவருளால்
அன்றேயடைக்கலங்கொண்டநம்மத்திகிரித்திருமால்
இன்றேயிசையினிணையடிசேர்ப்பரினிப்பிறவோம்
நன்றேவருவதெல்லாநமக்குப்பரமொன்றிலதே. (௪)

இதி ப்ரபந்தாவதார:,

அகிலஜகதேகசேஷியாய் அகிலஜகதேகபூர்ணனாய் அகில ஜகதாதாரனாய் அகிலஜகதேககாரணபூதனாய் அகிலஹே யப்ரத்யநீககல்யாணைகதாநனாய் அபாரகாருண்ய ஸௌசீ ல்யவாத்ஸல்யௌதார்யாத்யஸங்க்யேயகுணஜலதியான ஸ்ரிய:பதிபு ருஷோத்தமன் - ஒன்றுந்தேவுமுலகுமுயிருமற்றும் யாதுமி லாவன்று ஸஹஜஸங்கல்பைகதேசத்தாலே ப்ரஹ்மாண்டபர்யந்தமா க ஸ்ருஷ்டித்து தேவுமெப்பொருளும் படைக்கப் பூவில்நான்மு

* கருணைப்பெருங்கடலை என்று பாடம் இருப்பதாக ஒரு வ்யாக்யானம் செய்திருக்கிறது.

கனைப்படைத்து திசைமுகன்கருவுள்வீற்றிருந்து ப்ரஜாபதி பசுபதி ஸபாபதி வித்யாபதி ஜலபதி யஜ்ஞபதி முதலான ஸோத்ரப்ரபஞ்சத்தையும் சேதநாசேதநாதிகளென்றும் ஸ்ருஷ்டிஸ்திதிஸம்ஹாராதிகளென்றும் சொல்லுகிற ஸம்ஸ்தாநங்களையும் இவற்றிலுட்பட்ட ஸஜாதீயஸோமஸோமாவகாரவிசேஷங்களையும் விவிதவிசித்ரஸந்நிவேசங்களாகப்பகுத்து பண்டைநான்மறையும் வேள்வியும்கேள்விப் பதங்களும் பதங்களின்பொருளும், பிண்டமாய்விரிந்த பிறங்கொளியனலும்பெருகியபுனலொடுநிலனும். கொண்டல்மாருதமும் குரைகடலேழு மேழுமாமலைகளும்விசும்பும், அண்டமுந்தானாகிநின்று தனக்கு ஔரஸபுத்ரனுமாய் ஸர்வஸக்திவிஷ்ணுமான பதார்த்தபதார்த்தஸஹஸ்ர நிர்வாஹகனுக்கிவைத்தருள இவ்வதிகாரம்பெற்ற ப்ரஹ்மா நாபிஜாதனுய்த்தோன்றச்செய்தே அபிஜாததனுகையாலும் ஸர்வதோமுகமாக வேதப்ரவர்த்தனம்பண்ணுகையாலும் ஸர்வஸ்வதிஸஹசரித யஜ்ஞபாவனைகயாலும் நாலுவர்ணங்களையும் ஸ்ருஷ்டித்த நாநாவித ஸாமர்த்யத்தாலும் நமக்குநிகராரென்று அபிஜநவித்யாவ்ருத்த மதங்களும் ஸாதவ்யச்செருக்குமேறி கறந்தபாலுள்நெய்யே போலிவைத்து ளெங்குங்கண்டுகொளிறந்துநின்ற பெருமாயனை ஸ்வஸாமர்த்ய ஸாத்யமான ஸமாதியைக்கொண்டு ஸாக்ஷாத்கரிக்கலாமென்று பார்த்து இளைப்பினை யியக்கம் நீக்கியிருந்து முன்னிமையைக்கூட்டி யளப்பிலைம்புலனடக்கி யன்பவர்கண்ணே வைத்து துளக்கமில்சிந்தைசெய்துதோன்றிலும் சுடர்விட்டாங்கே, விளக்கினைவிதியில்கண்டு மெய்ம்மையைக்காண வொருப்பட்டவளவிலே பரஸ்வரூபஸாக்ஷாத்கார விரோதியாயிருப்பதொரு மாளாதவல்வினை இவனைஸமாதியில் நின்றும் மீட்டது. அப்பொழுது—

வம்பவிழ்போதமர்மாதருகந்தவம்மாநிதியைத்
தன்பலமேகொண்டுகாணக்கருதியதாமரையோன்
முன்பலகுற்றத்துவல்வினைமொய்க்கமுகிழ்மதியாய்
அம்புலிவேண்டியபாலனைப்போலவழுதனனே. (௫)

இப்படிக்கலங்கின ப்ரஹ்மா என்னேயென்னே நமக்கு ஸர்வஜ்ஞரார்த்தவிஷயமான ஸாக்ஷி கைபுகுராமைக்குக் காரணமென்னென்று விசாரித்து நின்றவாறில்லாதே அவிவேகமான அந்த:கரணத்தின் கஷாயபாகம்பிறவாமை என்றுபார்த்து உபாஸநாநிஷ்பத்திஹேதுவான கர்மவிசேஷத்தைக்கழிக்கப்பெறாதே யித்தனைநாளுமென்ன காயக்லேசம்செய்தோம். இமையோர்வாழ்தனிமுட்டைக்கோட்டையிலே கூறுசெய்வதாக எறவுமிழியவும் நெடுங்காலம் நிரர்த்தகமாக காயக்லேசம்பட்டோமென்று நெஞ்சுருகிக்கண்பனித்து நெடுமூச்செறிந்து நிலத்தைப் பார்த்திருந்தான்.

அடங்காக்கரணங்களைந் துடனொறுமடக்கிமுன்னம்
நெடுங்காலமிந்நிலமே * நிலையாய்ப்பூண்டுநீடுறைவான்
சடங்காற்பெரியதவங்கள்செய்தேனென்னதன்மையிதென்
றிடங்காத்திருந்ததிசைமுகன் றன்னையிகழ்ந்தனனே. (௫)

யஜ்ஞகோடிஸஹஸ்ராணி விஷ்ணோராராத்ய பத்மபூ:- பத்நௌ ஸௌத்ரகாத்யாத்மகம் ப்ராப்தவாநிதிஸுஸ்ருதி:-இப்படி அதிஶயிதஜந்மஹேதுவான தபஸ்ஸைப்பண்ணி அதிகாரமென்பதோரளறிலேயழுந்தி அநந்தஜ்ஞனான ப்ரஹ்மா, ப்ரத்யக்ஷ ஜநகடாக்ஷவிஶேஷத்தாலே ஸாக்ஷாத்காரயோக்யமான தபஸ்ஸுக்கு நிலமாவதேதென்று நிரூபித்து ஸத்யலோகமொழிந்தலோகங்கள்பதின்மூன்றும் ஸ்ருஷ்டிதன்னில் ஜம்பூத்வீபமொழிந்த மஹாத்வீபங்களாறும் ஜம்பூத்வீபந்தன்னில் பாரதவர்ஷமொழிந்த வர்ஷங்களெட்டும் போகபூமிகளாகையாலே புண்யகர்மவிஶேஷாநுஷ்டாநத்துக்கு உசிதக்ஷேத்ரங்களன்றென்று உபேக்ஷித்து ஸர்வோத்க்ருஷ்டமாய் ஸர்வகர்மாநுஷ்டாநயோக்யமான பாரதவர்ஷத்தில்வந்து புகுந்தான்.

விண்ணுலகில்வீற்றிருந்தமேன்மையாலும்வேதங்களிரண்டும்விரித்தலாலும்,கண்ணனைநான்கருத்துறவேகாண்பெனென்ன

* நிலத்தை என்றும், இழந்தனனே என்றும் பாடம் இருப்பதாக வ்யாக்யாநத்தால் தெரியவருகிறது.

க்காணுமல்விலக்கியதன்வினையைக்காணு, எண்ணியநற்புவனங்களேழுமாறுமிருமூன்றுதீவமுமெட்டிடமும்விட்டுப், பண்ணியநல்விரதமெல்லாம்பலிக்குமென்று பாரதத்தைப்பங்கயத்தோன்படிந்திட்டானே. (எ)

இப்படி ப்ரஹ்மா பாரதவர்ஷத்திலேவந்துபுகுந்து தான் ப்ரதாநமாகநினைத்திருந்ததொருபுண்யக்ஷேத்ரத்திலே ஒரு காலாலேநின்று ஊர்த்வஹஸ்தனையும் உச்ச்வாஸநிஶ்வாஸங்களையடக்கியும் ஒருவராலும் ஸஹிக்கவொண்ணாததபஸ்ஸைப்பண்ணினவளவிலும்ஸாக்ஷாத்காரம்ஸந்தர்ஶநஸம்பாஷணமல்லாமையாலே அத்யந்தவிஷண்ணனாயிருக்க அஶரீரியாயிருப்பதொருவாக்கு ஆகாஶத்திலே கிளம்பி வாராய் ப்ரஹ்மாவே நீவெறுக்கவேண்டுவதில்லை உனக்கு ஸேவாவிரோதியான கர்மம்கழிகைக்கு ஒருஉபாயத்தை உபதேஶிக்கிறேன் அபாரஶோகார்ணவத்திலேயழுந்தினவுனக்கு ஆயிரம்அஶ்வமேதம்பண்ணினாலல்லது ஸாக்ஷாத்காரஸித்தியுண்டாகாது அதிகௌரவத்துக்கும் காலவிளம்பத்துக்கும் நீயஞ்சினையாகில் ஒரு அஶ்வமேதத்தாலே ஆயிரம்அஶ்வமேதத்தின்பலம்ஸித்திக்கும்படி அநவதிகாதிஶயமாஹாத்ம்யமான ஸத்யவ்ரதக்ஷேத்ரத்திலெசென்று அதின்நடுவே ஸர்வாபயப்ரதனான ஸர்வேஶ்வரன் நித்யமாக விஶேஷஸந்நிதிபண்ணியருளுகிற ஸ்ரீஹஸ்திகிரியை உத்தரவேதியாக்கி அங்கே ஸர்வயஜ்ஞங்களிலும் ப்ரதாநமான அஶ்வமேதத்தாலே ஸர்வயஜ்ஞபோக்தாவானஸர்வேஶ்வரனை ஆராதிப்பாயென்று அந்தஅஶரீரிவாக்யத்தைக்கேட்டுஅதிஸந்துஷ்டனானப்ரஹ்மா அப்பொழுதே ஸத்யவ்ரதக்ஷேத்ரத்திலேவந்து விஶ்வகர்மாவை அழைத்து நாமிங்கே ஸர்வப்ராயஶ்சித்தமாக வேதங்கள்விதித்த வைஷ்ணவமான அஶ்வமேதத்தைப்பண்ணப்பாராநின்றோம் ஶில்பவித்யாவிஶாரதனானநீ ஸ்ரீஹஸ்திகிரியை அத்யாஶ்சர்யமாக வகுத்து அதின்மேலே உத்தரவேதியாக்கி யாகஶாலையைச்சமைத்து நம்முடைய யஜ்ஞத்துக்குவருகிற தேவாஸுரயக்ஷராக்ஷஸகின்னரகிம்புருஷ ஸித்தவித்யாதரகந்தர்வாதிகளெல்லாம் நெருக்கமறவிருக்கும்படி நீண்டகன்றமைந்திருப்பதொரு ரமணீயமாஜ்யா

நியைச் சடக்கெனச்சமைப்பாயென்று ஸதிஸம்ப்ரமத்தோடே ஆஜ்ஞாபித்தான்.

எத்திசைநிலனுமெய்தியருந்தவஞ்செய்தவந்நாள்
சத்தியவிரதஞ்செல்வாயென்றதோருரையின்சார்வால்
அத்திசைசென்றழைத்தங்கமரில்லெடுப்பான்றன்னை
உத்தரவேதிசெய்யென்றுரையணங்கிறையுரைத்தான். (அ)

இப்படிப்ரஹ்மாஆஜ்ஞாபிக்க விஶ்வகர்மாவும் ஸர்வோத்தமமான ஹஸ்திகிரியை உத்தரவேதியாக்கி இதுஸர்வேஶ்வரன் ஸந்நிதிபண்ணுகைக்கிடமாமென்று விசாரித்தான்.

உத்தமவமர்த்தலமமைத்ததொரொழிற்றனுவுயர்த்தகணையால் அத்திரவரக்கன்முடிபத்து மொருகொத்தெனவுதிர்த்ததிறலோன், மத்துறுமிகுத்ததயிர்மொய்த்தவெணெய்வைத்ததுணுமத்தனிடமாம், அத்திகிரிபத்தர்வினைதொத்தறவறுக்கு மணியத்திகிரியே. (க)

இவ்வண்ணம்சிந்தித்து உத்தரவேதியையும்யஜ்ஞஶாலையையும்படைவீடுமாகவகுத்து விஶ்வகர்மாகாட்டக்கண்ட ப்ரஹ்மா தனக்கு ஸந்தோஷவிஷயமாகையாலே இந்நகரத்துக்கு காஞ்சீ என்று பேராக்கினான். கயொப்ரஹ்மா தேந அர்சிதா காஶீ காஞ்சீஹஸ்திகா-நாமீ ப்ராப்தா ஸர்வஸர்வேஷாம் ஸித்திதா:ஸதா:.

திண்மணிகள்பொன்னுடனேசேர்தலாலுஞ் சிதையாதநூல்வழியிற்சேர்த்தியாலும், வண்மையெழுமீரண்டுவண்ணத்தாலும்வானவர்க்கும்வியப்பானவகுப்பினாலும், உண்மையுடைவாசியொளியோசையாலுமொருகாலுமழியாதவழகினாலும், மண்மகளார்க்கலங்காரமென்ன மன்னுமதிட்கச்சிநகர்கண்டுமகிழ்ந்திட்டானே. (க०)

இப்படி ஸம்ருத்திக்குஸம்ஸ்காரமாக வொருகாஞ்சியைச்சமைத்து அங்கே ஸ்வயம்யாமத்திலே உஷஸ்ஸந்த்யானான ப்ரஹ்மா ஸர்வி முதலான ப்ரஹ்மர்ஷிகளை தீக்ஷிக்குகளாக்கிக்கொண்டு ஸரஸ்வதீ என்கிற ஆற்றிலே தபஸ்ஸுபண்ணுகிற தன் ப்ரியாநவதீயான ஸரஸ்வதியையழைத்துக்கொண்டுவருவாய் என்று ஸ்ரீவஸிஷ்ட மஹர்ஷியை நியோகித்தான்.

காமங்கள்பலகொண்டவேதங்கொண்டுகைதவமேசெய்வார்க்குக்காணகில்லாப்; பூமங்கைகேள்வனைநான்கண்டுபோற்றப்புண்ணியத்தினிகரில்லாவிரதம்பூண்டேன், சாமங்கள்கழிவதன்முன்சடக்கெனப்போய்த்தன்னூற்றிற் றனியிருந்துதவஞ்செய்கின்ற, நாமங்கைவந்திடநீயழைப்பாயென்று நன்மகனைநான்முகன்முனவின்றிட்டானே. (௧௧)

இப்படி ப்ரஹ்மாவாலே நியுக்தனான ஸ்ரீவஸிஷ்டபகவான் ஸரஸ்வதிபக்கலிலே சென்று ப்ரணிபாதாஞ்ஜலிபந்தங்களைப்பண்ணி ப்ரஹ்மாவின்யாமத்தையறிவிக்க ப்ரணயகலஹகலுஷிதையானஸரஸ்வதி வாராதவளவில் ப்ரஹ்மா ஸாவித்ரீ முதலான பத்நிகளைக்கொண்டு யஜ்ஞம்பண்ணத்தொடங்க தைவஸுகாஸஹிஷ்ணுதராக்ஷஸர்கள் இந்த யஜ்ஞத்தைக்கலைக்கநினைத்துச் சென்று ஸரஸ்வதிக்கறிவிக்க அவளும் அதிகுபிதஹ்ருதயையாய்க்கொண்டு தக்ஷிணாபதத்திலேபோந்து வேறேயொரு மஹாநதியாய்ப்பெருகி ப்ரஹ்மாவினுடையயஜ்ஞஸம்ருத்தியை அழிப்பதாக ஸங்கல்பித்தாள்.

அன்னவடிவாளசையுமன்னநடையாளுயருமன்னவரசேறிவருவாள்த்தனயனத்தநயனுத்திதனையத்திதெனவுத்திபுரியாள், நன்னடைவிடாநடமிதென்னநடவாநடுவுணண்ணுகுடகேறியிழிவாணற்பதிகளற்பதிகள்கற்பரளவற்புதமருக்கதியினால், கன்னடைவிடாவிடமிலுந்நதிசிறுவிகடமன்னுகிரிகூடமிடியக் கட்டவிடையிற்றுவிழ*முற்றும் விழியுற்றடையவிட்டருகுற, அன்னநயசீரயனிதென்னெனவிழாவமரர்மன்னுபதியேறிமகிழ வச்சுதனைத்தனுவிலத்திசைவரத்தகையவற்றனுகினாள். (௧௨)

அன்றுநயந்தவயமேதமாவேள்வி
பொன்ற வுரையணங்குபூம்புனலாய்க் - கன்றிவர
ஆதியயனுக்கருள்செய்தனையானான்
தாதையரவணையான்றான். (௧௩)

இப்படி ஸகலலோகைக ரக்ஷகனான ஸர்வேஶ்வரன் ஸரஸ்வதீப்ரவாஹஸம்ஹாரத்திலே அரவணையோடேகூட அணையா

*முட்ட என்றுபாடம் இருப்பதாகவ்யாக்யானத்தால்தெரியவருகிறது.

கக்கிடந்தவளவில்கண்ணும்மனமும்களிக்கக்கண்டுநின்ற தேவயோஷித்துகளும் இவ்வண்ணம்பேசினார்கள்.

தரணியின்மன்னியயனூர்தனித்தவங்காத்தபிரான்
கருணையெனுங்கடலாடித்திருவணைக்கண்டதற்பின்
திரணரகெண்ணியசித்திரகுத்தன்றெரித்துவைத்த
சுருணையிலேறியசூழ்வினைமுற்றுந்துறந்தனமே. (௧௪)

இப்படி வேகவதியாய்வந்த ஸரஸ்வதியினுடைய கோபவேகமடங்கும்படி வெஃகாவில் துயிலமர்ந்தவெந்தைஸாக்ஷிக் கக்கலக்கமற்றுவந்த ஸரஸ்வதியையுங்கூட்டிக்கொண்டு ப்ரஹ்மா அஶ்வமேதயாகத்தை நடத்த வபாஹோமம் ப்ரவ்ருத்தமானவளவிலே ஆயிரங்கோடி ஸூர்யர்கள் உதித்தாற்போலே உத்தரவேதிமத்யத்திலே ஒருமஹாதேஜஸ்ஸு தோன்றிற்று.

சுகலேசமெண்ணியசூழ்வினைதீர்க்கத்துணிந்தயனூர்
அகலாதவன்புடன்கொண்டவயமேதவேதியின்மேல்
புகலோங்குபொன்மலையென்றதொர்புண்ணியகோடியுடன்
பகலோன்பகல்விளக்காகப்பரஞ்சுடர்தோன்றியதே. (௧௫)

வைஶாகஸ்ய ஸிதே பக்ஷே சதுர்தஶ்யாம் திதாவஹநி-ஶோபநே ஹஸ்தநக்ஷத்ரே ரவிவாஸரஸம்யுதே - வபாஹோமே ப்ரவ்ருத்தே து ஸுத்யாஸவநகாலிகே - யாகாதுத்தரவேத்யந்த: ப்ராதுராஸீஜ்ஜநார்தந:.

இப்படி பெருமாள் தோன்றினபடிக்கு நித்யஸூரிகள் முகத்தாலே காளங்கள் வலம்புரி கலந்தெங்குமார்த்தன.

பெருமையுடையத்திகிரிப்பெருமாள்வந்தார்போதவருள் பொழியும்பெருமாள்வந்தார், அருமறையினுச்சிதனினின்றார்வந்தாரங்கமுடனவையாகு*மரியோர்வந்தார், திருவுரையாய்த்தாம்பொருளாய்நிற்பார்வந்தார் திருவருளாற்செழுங்கலைகடந்தார் வந்தார்மருவலர்க்குமயக்குரைக்குமாயோன்வந்தார்வானேறவழிதந்தார்வந்தார்தாமே. (௧௬)

---

* அவையாகும்பெரியோர் என்று பாடம் இருப்பதாக வ்யாக்யானத்தால்தெரியவருகிறது.

அத்திகிரியருளாளப்பெருமாள்வந்தார்ஆனைபரிதேரின்மேலழகர்வந்தார், கச்சிதனிற்கண்கொடுக்கும்பெருமாள்வந்தார்கருதவரந்தருந்தெய்வப்பெருமாள்வந்தார், முத்திமழைபொழியுமுகில்வண்ணர்வந்தார்மூலமெனவோலமிடவல்லார்வந்தார், உத்தரவேதிக்குள்ளேயுதித்தார் வந்தாரும்பர்தொழுங்கழலுடையார் வந்தார்தாமே. (கஎ)

இப்படி ஆவிர்பவித்தருளின பெருமாளுடைய உத்ஸவ தேஜஸ்ஸிலே ஸூர்யமேறியோடின ப்ரஹ்மாவும் தேவர்களும் ரிஷிகளும்வருந்திக் குறித்துப்பார்த்து அத்தேஜோமண்டலத்துக்குள்ளே புண்ணியகோடிவிமானத்தையும் அவ்விமானமத்யத்திலே ஸவிதமண்டலவரானபெருமாள் ப்ரத்யக்ஷமாயிருப்பதொரு காலமேகம்போலே நின்றருளினபடியையும்கண்டு ஸாக்ஷாத்விஸ்மய பரவசராய்க்கொண்டு இங்ஙனேபேசினார்கள்.

திருபரிதிசைந்தமகுடமுமெழின்மதிகழ்ந்தவதனமும், இருவகையிலங்குகுழல்களிலெதிர்பொரவுகந்தமகரமும், ஒருதகவுயர்ந்ததிருமகளொளிமறுவின்மன்னுமகலமும், உருவருவுமிழ்ந்தவுதரமுமுலகடையநின்றகழல்களும், மருவினிடையோங்குபுனலெனமலைகுனியநின்றமலையென, மருளறவிளங்குமொளியெனமலரயனுகந்தபயனென, அருவிலுறைகின்றவுயிரொனவடியவருகந்தவமுதென, அருமறைகளொன்றியடிதொழவருள் வரதர்நின்றபெருமையே. (கஅ)

இவ்வண்ணம் ஆஸ்சர்யபாவத்தாலும் ஸக்ஷாத்காரத்தாலும் ப்ரீதராய்க்கொண்டு தொழுவதெழுவதாய் இவர்க்கு நாமடியோமாகப்பெறுவதே என்று வேதாந்தஸாரமான அர்த்தத்தை இங்ஙனே விண்ணப்பஞ்செய்தார்கள்.

சித்தசித்தெனவிரித்துரைத்தனவனைத்தமைத்துறையுமிறைவனுர், சிறியபெரியவுருவடையவுடலமெனநடலமிலதிலகுநிலையினர், சித்திரத் * தொழிலையொத்தபத்தரொடுமுத்தர்பித்தியெ

* தொழினி என்றுபாடம்-இருப்பதாக வ்யாக்யானத்தால் தெரியவருகிறது.

னுமுணர்விஞர், இசைவின்மறைநெறியிலெறியவுருமுறைகண் முறியசிறையரியநிறைவிஞர், கத்துவிக்கவலகத்துவித்தைவழிக ற்றவர்க்கசைவின்மாயஞர், கபிலர்கணசரணர்சுகதர்சமணரரர் வழிகளழியுமருண்மொழியிஞர், கத்திலக்கிலுமருக்குலத்திலும சித்திலொக்குமொருமுதல்வஞர், காணமிடுகடியபதிஞெரிருடி கமுமடையமுடியுமடி யிருடியார், ஒத்தனைத்துலகு மொற்றி யொற்றிவருமிப்பவத்திசையுமசைவிஞ, ருருவமருவமெனுமுல கின்முடகிலெனவுவமையிலதிலகுதலைவஞர், உத்தமப்படிவகுத் தவித்தைகளிலுத்தரிக்கவுணர்குணவஞ, ருரியகிரிசைகளிலரிய தொருவிரகுதெரியவிரையுமவர்பரிவிஞர், சத்தசத்தெனுமனை த்தனைத்தவினைதொத்தறுக்கவலதுணிவிஞர், சரியுமளவிலுரியவ ரையறிவரியதமனிநெறிசொருகுவிரகிஞர், தத்துவத்திரளுனைத் துதைத்தடைவுதத்துவிக்குமவர்தலைவஞர், தருகவுணருமவர்சர ணமணுகவிடலரியவருள்வரதரடியமே (௧௯)

ப்ரஹ்மா அப்பொழுது ஸம்ஸாரஸாகரோத்தாரகங்களையு டையவனைக்கொண்டு கிட்டிச்சென்று ஸர்வேச்வரனுடைய ஸாக்ஷாத்காரத்தை அநுபவித்துத் தான்பெற்றபேற்றை இங்ங னேபேசினன்.

திருமகண்மண்மகணீளைமுதலா வெல்லாத்தேவியருந்தன்னு டனேதிகழ்ந்துநிற்கத், தருமமிருமூன்றுமுதலனைத்துந்தோன் றத்தன்னனையசூரிகடன்னடிக்கீழ்வாழ, அருமறைசேரளவில்ல லாவவனியின்க ணரவணைமேல்வீற்றிருப்பாலனைத்துங்காக்குங், கருமணியைக்கரிகிரிமேற்கண்டேனென்றன்கடுவினைகளனைத்து ம்நான்கண்டிலேனே. (௨0)

இப்படிக் கண்கள்காண்டற்கரிய ஸந்நிவேசவிஷயத்தைக்க ண்ட ப்ரஹ்மா - தத்ஸந்தீக்ஷ்யபாக்யஸம்ஹ்ருஷ்டம் விதாநவேத்ரா ஸதஸீஸம்ப்ரஹம்-ஸதக்ஷிணாக்நிதஸ * வாணீவாக் ஸ்தோத்ரயத்தாக்ஷதிர்விவேகமோக்ஷதாம்॥ ப்ரதக்ஷிணம்ப்ரதி தயா ப்ரதக்ஷிணம்ப்ரயாதிநாம்பநரேவஸஞ்சிதம்கரோணவ ஸ்யாதந்தரஸதாவ: ப்ரயேண ராஜம்பரிஷத்வஜேக்ஷணம் - இ

* ஸவ்யா என்று ஒருபாடம்.

ப்ரகாரத்திலே மொய்ம்மாம்பூம்பொழில்படியே க்ரமேண ஸஷட்வெஷ்டிதங்களைப் பண்ணின ப்ரஹ்மா இருக்கிறதுபோது ஒடிக்கூடித் § தரித்துநாச்சிமாருடனே பெரியபெருமாள் எழுந்தருளி நிற்கிற நிலையை இங்ஙனெ அநுபவித்தான்.

பெடையிரண்டையொரனமடைந்து பிரிந்திடாவகையே சலாம் பெருகுமருவிகளருகுமருவியபெரியமணிவரையிலலாம், பிடியிரண்டொடுகளபமொன்றுபிணைந்தபேரழகோதலாம் பிரிவிலொளியொடுநிழலுமருகுறு மிரவியிலகுதல்பரவலாம், கொடியிரண்டொடுவிடவியொன்றுகுளிர்ந்தவரறு குலாவலாங் குறைவில்சுருதியுநினைவுமிலகிய தருமவருநிலை * யென்னலாம், அடியிரண்டையுமடையுமன்பரறிந்தபேரருளாளனு ரனுகுமலர்மகளவனிமகளொடுகரடிகிரிநிலைகவர்தலே. (உக)

அநந்தம் அநந்தம் ஸஹஸ்ராணவரான பெருமாளுடையவிசித்ர ஸ்வணங்களை அநுபவிக்கத்துடங்கி ஒரொருகாரங்களுக்கு ஒரொரு உபமாநாவங்களைத்தேடி ஸணவைசிஷ்டியத்துக்கு ஒரு உபமாநாவங்களும் தேடவொண்ணுதென்று கொண்டாடினுன்.

வேரொப்பார்விண்முதலாங்காவுக்கெல்லாம் விழியொப்பார்வேதமெனுங் கண்டனுக்குக், காரொப்பார்கருணைமழைபொழிந்திடுங்காற்கடலொப்பார்கண்டிடினுங்காணுக்கூத்தால், நீரொப்பார்நிலமளிக்குந்தன்மைதன்னு னிலமொப்பார்நெடும்பிழைகள்பொறுக்குநேரால், ஆரொப்பாரிவர்குணங்களனைத்துங்கண்டா லருளாளர்தாமெனினுந்தமக்கொவ்வாரே. (உஉ)

இப்படிப்பெருமாளுடைய குணங்களைவகையுந்துகையுமாகவகுத்து அநுபவிக்கிறவவஸ்தோபவனை ப்ரஹ்மா மேல்பவத்தாலே யஜ்ஞவாடத்தின்மேற்பாதியிலே வெஃகாவில்துயிலமர்ந்த வெந்தையையுங்கீழ்பவத்தாலே உத்தரவெதியிலே நின்றருளின பெருமாளையுஞ்சேர அநுபவித்து இங்ஙனே அநு

---

§ திரிந்து என்று ஒருபாடம்.

* நிலையிதென்னலாம் என்றுபாடம் இருப்பதாக வ்யாக்யாநத்தால் தெரியவருகிறது.

ஸம்பித்தான், ஸாகம் வேதவதீதேஸே ஹயசிரஸோ மேதஸ்ய தே - உபாயனமஸாவேத ஸ்துதிம் ப்ரதிக்ருஹ்ணாது மே ப்ரபோ: என்று இப்படி ப்ரஹ்லாதஸாகரத்தில் முகிழ்த்தவுடம்பும் பனியரும்பினகண்களும் தழுதழுத்தமிடறும் தளர்ந்தநிலையுமாய்க்கொண்டு தன் ஸ்வாதந்த்ர்யமையமறந்து அடிமையிலே அடிகொண்டு ஸ்தோத்ரம்பண்ணிவையை விண்ணப்பஞ்செய்ய ப்ரஸந்நவதனரான பெருமாள் உனக்கு வேண்டினவரங்கொள்வாயென்றருளிச்செய்தார்.

வரம் வரய தஸ்மாத் த்வம் யதாபிமதமாத்மந:| ஸர்வம் ஸம்பத்ஸ்யதே தேவ ஸம்ஸாரேஷ்வபி யத்ததே,

எந்நிலமுங்குரத்தாற்குறிசெய்தவெழிற்பரிகொண்
டன்னமுயர்த்தசெய்யோ னன்றுவேள்விசெய்வேதியின்மேல்
முன்னிலையாகிமூர்த்திப்புடனுன்முகமற்றுமுனக்
கென்னவரந்தருவோமென்றுநாதனியம்பினனே (௨௩)

அப்பொழுதே ப்ரஹ்லாதனும் நித்யஸூரிகள் ஸதாதர்சநம்பண்ண ப்ராப்யமான தேவரீருடைய திருமேனியை நான் கண்டு அநுபவிக்கப்பெற்ற விதுவொழிய வேறுவேண்டுவதொருவரமுண்டோ ஸம்ஸாரிகள்பொய்ந்நின்றஞானமும் பொல்லாவொழுக்குமழுக்குடம்பு மின்னின்றநீர்மை யினியுறாதபடி இங்கே தேவரீர் நித்யஸந்நிஹிதராய்நின்று வேண்டுவார்க்கு வேண்டும்வரங்கொடுத்து வாழ்வித்தருளவேணுமென்று விண்ணப்பஞ்செய்தான்- தேவ கிந்நு ஜகத்யாமேகயா தேவ ஸ்வீகாரமாத்ரம்- யயா ஸத்யம் ப்ரதிஷ்டிதம் நிவாஸம் ஸுஸ்திரம் ஹயசிரஸோ ஸர்வதா ஸர்வலோகாநாம் நயநகோசரதாம் நாத - ப்ரபன்னாந்நு காங்க்ஷிதம் விநாதிந்யஸ்துவப்ரஸாதம் ஜனகாநாம் ப்ரஸாதா- என்று இப்படி ஸர்வகாலத்திலும் ஸர்வப்ராணிகளுக்கும் ஸாக்ஷாத்கரிக்கலாம்படி கோலஞ்செய்திங்ஙனே எழுந்தருளியிருக்கவேணுமென்று விண்ணப்பஞ்செய்ய தேவதியஸ்ஸ ஸநந்தந்ப்ராணா தேஹம் ப்ரதிக்ஷ தாம் தமேவம் தேவநிவஸிஷ்யாமி ஸததம் ப்ரீதோ ஸ்துதே- என்றுஇப்படி பெருமாள் அருளிச்செய்கையாலே ஸ்ரீ தாஸ்ஸ்வந்நுனப்ரஸாத

க்ரதுஶேஷத்தைத்தலைக்கட்டி, ஶாஸ்த்ரீயமாந யஜ்ஞப்ரக்ரியையாலே ஸம்பூர்ணஸமாராதநம்பண்ணி பரமஹம்ஸரான மஹர்ஷிகளைக்குறித்துத் தான்பண்ணின ஸ்ரீமத்வைகாநஸஸூத்ரவ்யாஜ்ஞவாம்ஶிகமான ஸமாராதநக்ரமத்தைஸங்க்ரஹித்து உபதேஶித்தான்.

சென்றுமலர்பறித்தெந்நாதன்சேவடிப்போதுகந்து
நன்றெனநீர்சுடர்நன்முகவாசவிலைகொடுத்துக்
கன்னலிலட்டுவத்தோடன்னஞ்சிலைக்கறிபடைத்துப்
* பின்னுஞ்செவித்தவன்பாதம்பணிமின்களென்றனனே. (௨௪)

ஶ்ரீநாதனும் பெருமாளும் அதிஸந்துஷ்டராய் ப்ரஹ்மாவே உனக்கு நான்தந்தஅதிகாரக்குறைதீரும்படி ஸரஸ்வதீஸாவித்ரிகள்முதலான பத்நிகளுடனே உன்னுடையலோகத்தையேறச்சென்று அதிகாரஶேஷத்தை நடத்துவாயென்று அருளிச்செய்ய ப்ரஹ்மாவும்அஜ்ஞாதவ்ருத்திலோகங்களுக்குள்ளே மேலான ஸத்யலோகத்திலேசென்று ஸத்யவ்ரதக்ஷேத்ரமாஹாத்ம்யத்தையும்ஸத்யவ்ரதரானபெருமாள் திருவருளையும் அநுஸந்தித்துக்கொண்டு ஸம்பூர்ணமஹாவைபவஸஹிதஸமாதிவிஶேஷத்தாலே க்ருதார்த்தனாயிருந்தான்.

ஆழிநிலைவினைகடிவானயமேதமுடிந்ததற்பின்
வேழமலைநாயகனுர்விடைகொடுக்கவிண்ணேறி
நாழிகையில்வானவரைமாற்றியிடுநான்முகன்றன்
ஊழியெலாமழியாதயோகமடைந்திருந்தானே. (௨௫)

ஆதியுகத்தயன்கண்டிடநின்றவருள்வரதர்
காதலுயர்த்தகளிற்றைத்திரேதையிற்காத்தளித்து
வாதுயர்தேவகுருவுக்கிரங்கித்துவாபரத்தில்
சோதியநந்தன்கலியிற்றொழுதெழநின்றனரே. (௨௬)

---

* பின்னும் செவித்தவன்பாத மென்னுங்கள் முனிகளென்றன்-என்று பாடமிருப்பதுபோலே வர்த்தமாநத்தால் தோற்றுகிறது.

புண்டரீகமுயர்த்தபுராணனார்பொய்யின்மாமகவுத்தரவேதியில், கொண்டலாரருண்மாரிபொழிந்திடக்கொண்டதோருயர்கூர்மதியன்பினால், பண்டைநான்மறை மௌலிபடிந்தநான் பாரின்மெய்விரதக்கவிபாடினேன், தொண்டைமண்டலவேதியர்வாழவே தூயதென்மறைவல்லவர்வாழவே. (உ௭)

உய்விரதமொன்றின்றியடைந்தாருய்ய வொருவிரதந்தான் கொண்டவுயர்ந்தமாலை, செய்விரதமொன்றானுந் * தெளியகில்லாச்சிந்தையினாற்றிசைபடைத்ததிசைமுகன்றான், பொய்விரதநிலமெல்லாம்போயேபீண்டி, புகலிதுவேபுண்ணியத்துக்கென்றுசேர்ந்த, மெய்விரதநன்னிலத்துமேன்மையேற்றிவேதாந்தவாசிரியன்விளங்கினானே. (உ௮)

சீராருந்தூப்புற்றிருவேங்கடமுடையான்
தாராரருளாளர்தாளையந்து-சீராக
மெய்விரதநன்னிலத்துமேன் § மையிதுமொழிந்தான்
கையிற்கனிபோலக்கண்டு. (உ௯)

---

* தெளிகைகில்லா என்று பாடமிருப்பதாக வ்யாக்யாநத்தால் தெரியவருகிறது.

§ மெய்ம்மை என்று பாடமிருப்பதாக வ்யாக்யாநத்தால் தெரியவருகிறது.

கவிகதகபஞ்சவக்த்ரேணாப்யஸஹநீயம்-ஸத்வ்ரதமாஹாத்ம்யம் - வ்ருத்தநாமஷ்டாவிம்ஸதிரேஷா ஸமாப்தா:.

இதிகவிதார்க்கிகஸிம்ஹஸ்ய ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரஸ்ய
ஸ்ரீமத்வேங்கடநாதஸ்ய வேதாந்தாசார்யஸ்ய க்ருதிஷு

ஹஸ்திகிரிமாஹாத்ம்யம்
ஸம்பூர்ணம்.

---

ஸ்ரீமதே நிகமாந்தமஹாதேஸிகாய நம:.